# ஸ்ரீ சுவாமி சிவானந்தர்



1887 செப்டம்பர் 8உ தென்தமிழ் நாட்டில் தோன்றினர். டாக்டர் பட்டம் பெற்று தென் கிழக் காசியாவில் பணியாற்றினர். 1923ல் அனைத்தையும் துறந்து துறவியானர். 1924 ல் ரிஷிகேசத்தை அடைந்து ஸ்ரீ சுவாமி விசுவானந்தரிடம் சந்நியாச தீக்ஷை பெற்றார். இமயமலைச் சாரலில் பல வருடங் கள் கடும்தவம் புரிந்து தன்னையறிந்த தனிப்பெரும் முனிவரானர். 1936ல் தெய்வநெறிக் கழகத்தைத் தோற்றுவித்தார். உலகெங்கும் நூற்றுக்கணக்கான கிளைகளைப் பரப்பி நிற்கும் இந்தக்கழகம் ஜாதி, மத, நிற,இனம், மொழிவேற்றுமையற்றதோர் ஒன்றுபட்ட சமுதாயத்தை தோற்றுவிக்கும் முயற்சியில் முனைந் துள்ளது. ஸ்ரீ சுவாமிகளின் 300க்கும் மேற்பட்ட நூல்கள் எண்ணற்றவர்களை நல்வழிபடுத்தியுள்ளன இமயஜோதி'யாகத் திகழ்ந்த ஸ்ரீ சுவாமிகள் 1963 ஜூலை 14உ இரவு இறையுடன் இரண்டறக் கலந்து இதயஜோதி'யானர்.

ௐ

# ஞான விருந்து

## ஜகத்குரு ஸ்ரீ சுவாமி சிவானந்தர்




**1988**

மதுரை தெய்வநெறிக் கழக

பொன்விழா ஆண்டு வெளியீடு

# சமர்ப்பணம்

மனிதனைப் பரிசுத்தப்படுத்தி நிறைவுடையவனாய் ஆக்குவது ஞானம். 'நஹிஞானேனஸத்ருசம் பவித்ரம் இஹ வித்யதே' என்கிறது கீதை. அத்தோடு இறைவனை அடையவும் ஞானம் வழி வகுக்கின்றது. ஞானத்தைப் போதிக்கும் சமஸ்கிருத நூல்கள் எண்ணற்றவை.

இவ்வரிய ஞான மார்க்கத்தை நமது பெரியவர்கள் போதித்தார்கள்; அதன்படி வாழ்ந்தும் காட்டியிருக்கிறார்கள்.

அவதார புருஷர் ஜகத்குரு ஸ்ரீ சுவாமி சிவானந்தர் இந்நூலில் அருளியுள்ள கருத்துக்கள் அனைவரும் படித்து உணரவேண்டியவை.

"ஞான விருந்து" எனும் இவ்வரிய நூல் மதுரை எஸ் எஸ். காலனியில் அமைந்துள்ள **ஸ்ரீ வித்யாலயம் மெட்ரிக்குலேஷன் பள்ளியின் நன்கொடையால்** அச்சிடப் பெற்று குருதேவரின் பாதங்களில் சமர்ப்பிக்கப்படுகிறது.

மதுரை
16-9-88

**தெய்வநெறிக் கழகம்**

# ஆசியுரை

‘‘ஞான விருந்து’’ எனும் இந்நூலில் குருதேவர் சிவானந்தரின் உயரிய கருத்துக்கள் அடங்கியுள்ளன.

ஞானம் தான் மனிதனை இறைநிலையையடைய இட்டுச் செல்கிறது.

‘எத்தனையோ ஜன்மங்களுக்குப் பிறகு ஒருவன் ஞானவான் ஆகிறான்’ என்கிறது கீதை.

வாழ்க்கையின் இலட்சியமே ஞானத்தைப் பெறுவது தான்.

இவ்வரிய ஞானத்தை ஞானிகளிடமிருந்து, ஞான நூல்களிடமிருந்து தான் நாம் பெறமுடியும்.

ஞானிகளுக்கெல்லாம் ஞானியாக விளங்கிய ஜகத்குரு ஸ்ரீ சுவாமி சிவானந்தரின் ஞான நன்முத்துக்கள் அடங்கிய இவ்வரிய நூலை அனைவரும் படித்துப் பலனடைவார்களாக.

**சுவாமி விமலானந்தா**

தலைவர், சிவானந்த தபோவனம்,

சிவானந்த நகர் P.O.

மதுரை-6

## உள்ளே உள்ளவை



# ஞான விருந்து

ஆண்டவன் மீதுள்ள நம்பிக்கையே ஆன்மீக ஏணியின் முதற்படி. அதுவே சாதகனுக்கு ஆத்மீகப் பாதையில் உற்சாகத்தை அளித்து அவனை ஆண்டவனின் அருளுக்குப் பாத்திரமாக்குகிறது.

ஆண்டவன் மீது பூரணமான விசுவாசம் கொள்ளுங்கள். அப்பொழுது தான், உங்களது கவலைகள், பீதிகள் யாவும் ஒழிந்து, மேலாம் சாந்தி உங்களிடம் நிலவும்.

விசுவாசம் யுக்தியைக் கடந்தது. விசுவாசமே ஆண்டவனுடைய ஆலய வாயிலைத் திறக்கின்றது. விசுவாசமே பேரானந்தத்தையும், பரமசாந்தியையும் அளிக்கும். இறைவனுடைய பரமபதத்திற்கும் உங்களை இட்டுச் செல்லும். எனவே, மாறுத, குன்றுத, திடமான விசுவாசத்தை மேற்கொள்ளுங்கள்.

ஞானத்துடன் தொடர்பு, சத்சங்கம், ஆத்மீகநூல்களைப் படித்தல் ஆகியவை மூலம் ஆண்டவன் பால் உள்ள நம்பிக்கையை வலுவாக்கிக் கொள்ளுங்கள்.

தீவிர நம்பிக்கையுடன் இருங்கள். அப்பொழுது தான் ஆண்டவனை அடைய உங்களிடம் இச்சை பிறக்கும்.

கடவுளின் சொரூபத்தையும், இலட்சணங்களையும், மகிமையையும், தெய்வீக வாழ்க்கையின் மேன்மையும் ஆண்டவனை அடைவதால் ஏற்படும் பலனையும் நன்கு தெரிந்து கொள்ளுங்கள். அப்பொழுது தான் உங்களிடத்து சரணுகதி மனோபாவமும், பக்தியும் வலுப்பெறும்.

சிரத்தை (விசுவாசம்), முத்தியை விரும்பும் தீவிர இச்சை (ஈசுவரதரிசனத்துக்கான ஏக்கம்) ஆத்ம நிவேதனம் ஆகிய இம்மூன்றும் ஈசுவர தரிசனத்திற்கு இன்றியமையாதனவாம்.

உங்களது இதய குகையில் ஒளிக்கெல்லாம் ஒளியாய் எப்பொழுதும் பிரகாசித்துக்கொண்டிருக்கும் ஆத்மசைதன்யத்தை நாடுங்கள். அப்பொழுது உங்களைச் சூழ்ந்துள்ள அஞ்ஞான இருள் நீங்கும்.

சாதுசங்கம், பற்றற்ற சேவை, துறவு, வைராக்கியம், பிரார்த்தனை, தியானம் முதலிய ஆத்மீக நெறிகளின் மூலம் ஆண்டவனை அடையப் பாடுபடுங்கள்.

ஆண்டவனை அடையப் பாண்டித்தியம் தேவையில்லை; விசுவாசமும் - மனத்தூய்மையும் - பக்தியுமே தேவை.

ஆத்மீகப் பாதையில் ஊக்கமும் விடாமுயற்சியும் இன்றியமையாதவை.

தீவிர அருட்தாகம் இருப்பவனுக்கு ஆண்டவன் அருள் தவருது கிட்டும்; அவன் முயற்சியும் ஒருக்காலும் வீணுகாது.

உறுதியான - நேர்மையான - மேலான நோக்கத்தையே கொள்ளுங்கள்; அதை எப்பொழுதும் பரிசீலனை செய்த வண்ணமாகவும் இருங்கள்.

ஆத்மனை அறிவது, பூரணத்வம் பெறுவது, அமர நிலையை அடைவது, பேரின்ப நிலையை எய்துவது, பரம சாந்தியில் திளைத்திருப்பது, — ஆகிய இவையே உங்களது மேலான இலட்சியமாக இருத்தல் வேண்டும்.

முமுக்ஷுத்வம், தீவிர விவேகம், வைராக்கியம், தன்னடக்கம், ஆகிய இவைகளைக் கொண்டுள்ளவனே உண்மையான ஆத்மீக சாதகன் ஆவான்.

ஜனன மரணச் சுழலிலிருந்து விடுதலையடைய ஜீவன் கொள்ளும் தீவிர இச்சையே ஜீவனுக்கு ஏற்படும் அருட் தாகமாகும், கடவுள் பசியாகும்.

ஜீவனுடைய அத்தியந்த விருப்பம் மெய்ப்பொருளில் ஒன்றித்து மேலாம் ஆனந்தத்தையும் பரம சாந்தியையும் அடைவதே.

கடவுள் எங்கும் நிறைந்துள்ளார். அவருடைய கண்கள் அண்டசராசரங்கள் அனைத்தையும் பார்த்தவண்ணமாகவே இருக்கின்றன. அவருடைய கைகள் ஜீவராசிகள் அனைத்திற்கும் அபயம் அளித்தவண்ணமாகவே இருக்கின்றன. நீங்களும், பயமின்றிப் பூரண விசுவாசத்துடன் அவரது இனிமையான நாமத்தில் அடைக்கலம் கொள்வீராகில் அவரால் இரட்சிக்கப்படுவது உறுதியே.

உலகப்பொருள்கள் அனைத்தும் சாரமற்றவை; உபயோகமற்றவை; அழியக்கூடியவை; துக்கம் தருபவை. இந்திரியங்களும் மனதும் ஆசைகாட்டி உங்களைப் புறஇன்பங்களில் ஆழ்த்துகின்றன. இதனால் கேடுதான் ஏற்படுமேயொழிய நலன் ஒருக்காலும் ஏற்படப்போவதில்லை. இவைபோன்றவை அல்ல ஆத்மனை அடைவதினால் ஏற்படும் பலன். ஆத்ம சாக்ஷாத்காரம் ஏற்பட்டால் மேலாம் சாந்தியும் நித்திய ஆனந்தமும் வந்து அடையும்; ஜனன மரணமும் உன்னை விட்டு ஒழியும். எனவே ஆத்மனை அறிய இடையறாது பாடுபடுங்கள்.

இவ்வுலகம் ஒரு சத்திரம், தர்மசாலை. இது உங்களது சொந்த ஸ்தானமன்று. உங்களது பூர்வீக இருப்பிடம் பரம்தாமன். எனவே அதை நோக்கிச் செல்லுங்கள்.

உலகம் கானல்நீர் போன்றது. மறையும் மின்னலை ஒத்தது. இவ்வாறு உணர்வீராகில் மாயை உங்களைப் பாதிக்காது; காலனும் உங்களை அணுகான்.

உலகில் ஒவ்வொன்றும் நிலையற்றது; தோன்றுவதும் மறைவதுமாகவே இருக்கின்றது. மனமும் ஒரு நிலையிலிருந்து மற்ருெரு நிலைமைக்கு மாறிய வண்ணமாகவே இருக்கின்றது.

மூப்புக்கும் மரணத்துக்கும் உட்பட்ட உங்களது வாழ்வில் உங்களுக்கு ஏன் இவ்வளவு மோகம்? இதனுல் துக்கந்தான் விளையுமேயொழிய ஒருவித சுகமும் உங்களுக்கு ஏற்படாது. எனவே இப்பொழுதாவது நித்திய வஸ்துவை நாடுங்கள், அமர நிலையை அடையப் பாடுபடுங்கள்.

உலகம் வெறும் பகட்டு; மாயையின் பொய்த்தோற்றம்' அறிவிலிகள்தான் இதில் மயங்கி உழல்கின்றனர். ஞானிகளோ இதன் பொய்க்காட்சியை உணர்ந்து இதனுடன் தொடர்பு வைத்துக்கொள்வதில்லை; எப்பொழுதும் ஆத்மனில் நிலைத்துப் பேரின்பத்தைப் பருகியவண்ணமாக இருக்கின்றனர்.

எவன் ஆடம்பர வாழ்க்கையைப் புறக்கணிக்கின்ருனே, எவன் ஆன்ம வாழ்க்கையைக் கைப்பற்ற உறுதியான சங்கல்பத்தைக் கொள்கின்ருனே, எவன் உலகப்பொருள்களின் அழியும் தன்மையை உண்மையாக உணர்கின்ருனே அவனே பேரின்ப நிலையை விரைவிலேயே அடைய வல்லவனுவான்.

அறிவுடையோர் பிறப்பு - இறப்பு - மூப்பு-பிணி - துக்கம், - கவலை முதலிய கேடுகள் நிறைந்த சம்சார வாழ்க்கையை வெறுத்தல் வேண்டும்; அதனின்று விடுதலையடையவும் பாடுபடல் வேண்டும்.

பிறப்பதும்துக்கம், இறப்பதும்துக்கம், பார்ப்பதும் துக்கம் கேட்பதும் துக்கம், எல்லாமே துக்கமே. துக்கம் இல்லாத ஒரே வஸ்து உங்களது ஆத்மனே, பரம்பொருளே. அதுவே

நித்திய சாந்தியையும் பேரானந்தத்தையும் அளிக்கவல்லது. எனவே, விசுவாசம்-மனத்தூய்மை-தியானம் ஆகியவற்றின் மூலம் உனது ஆத்மனே அறிய முற்படுங்கள்.

உலகப்பொருள்கள் உங்களேப்பந்தப்படுத்தும்; உங்களது ஆத்மீக முன்னேற்றத்தைத் தடைசெய்யும். எனவே அவற்றின் மீதுள்ள ஆசைகளேத் துறந்து அந்த ஆசைகளே ஆண்டவன்பால் திருப்புங்கள்.

உலக ஆசை சிறிதேனும் இருக்கும் அளவு ஆண்டவன்பால் அன்பு பிறக்காது; அவன் அருள் கிட்டாது.

உலகப்பற்றுதல்தான் துக்கங்களுக்கெல்லாம் காரணம். இதை அறவே ஒழிக்க வைராக்கியமும் ஆத்ம தியானமும் தேவை.

## போகப் பொருள்களைப் புறக்கணியுங்கள்

எப்பொருள் உங்களிடம் பற்றுதலே ஏற்படுத்துகின்றதோ அப்பொருளே உங்களே விட்டுப் பிரியும்பொழுது துக்கமாகவும் பரிணமிக்கின்றது.

உற்றர் உறவினர் உங்களேப் பிணைக்குஞ் சங்கிலிகளே.

ஆசைகள் அனேத்தும் அமைதிக்கும் ஞானத்திற்கும் தடைகளே.

இந்திரிய போகங்கள் அனேத்தும் ஆரம்பத்தில் சுகத்தையும், இறுதியிற் கொடிய துக்கத்தையுமே தருகின்றன.

தேகம் அழியக்கூடியது; விகாரப்படக்கூடியது. பிறத்தல் — இறத்தல் — வளர்தல் — தேய்தல் — மாறுதல் — மாய்தல் ஆகிய ஆறு பாவ விகாரங்கள் இதற்கு உண்டு. இதனுல் ஒருவித பிரயோசனமுங் கிடையாது. எனவே இது வேண்டப்படாததே.

விஷயாதிகள் அனைத்தும் கேடு நிறைந்தனவாதலால் அவற்றிற் பற்று வைப்பவன் அவைகளின் தீமையிலிருந்து தப்பமுடியாது. அழிந்துபட்டே போகின்றான்.

போகமார்க்கம் அல்லது மாயையின் மோக மார்க்கம் மனிதனுக்கு அழிவை உண்டுபண்ணக்கூடியது. ஆதலால், அவ்வழிச் செல்லாது துறவு மார்க்கத்தையே மேற்கொள் ளுங்கள். அப்பொழுது உங்களது துக்கங்கள் — வேதனை கள் — வருத்தங்கள் முதலியன யாவும் ஒழிந்துபட்டுப் போகும்.

போகவாழ்க்கை உங்களை நரகத்திற்குக் கொண்டு செல்லும். ஆனால், ஆத்ம தியான வாழ்க்கையோ அமரத் வத்தையும் நித்திய சாந்தியையும் அளிக்கும். பரமனுடைய மேலாம் பதத்திற்கே இட்டுச் செல்லும்.

ஆசைகள் அற்றவனிடம் இந்திரியங்கள் சேஷ்டைசெய் வதில்லை. இந்திரியங்கள் அவன் வசமாகித் தாமாகவே ஓய்ந்துபோய்விடுகின்றன.

ஆசைகளும் வியாதிகளும் கானல் நீர்போன்று உங்களை மயக்கி உங்களை படுகுழியில் அமிழ்த்துகின்றன. எனவே, அன்பர்களே, விஷய சுகங்களை நாடாதீர்கள். அவை ஒருக் காலும் உங்களுக்கு சிரேயசை அளிக்கா. சிரேயசைஅளிக்கக் கூடியது ஆத்மீக மார்க்கமே. அதுவே தான் பேரானந்தத் தையும் பரம சுகத்தையும் அளிக்கவல்லது.

உங்களது இந்திரியங்களே உங்களுடைய கொடிய விரோதிகள். அவற்றை அடக்கினால் மீண்டும் பிறவாதிருக்க வழியுண்டு.

விஷயாதிகளை விரும்பினால் அத்துடன் தொடர்ந்து வரும் துன்பங்களையும் அனுபவிக்கவேண்டியிருக்கும்.

விஷயப் பொருள்களில் ஆசை குறையுமளவுக்கு மன வமைதியும் ஆனந்தமும் பெருகும்.

உங்களது உதயக்குகையில் எப்பொழுதும் மெல்லிய குரலில் திவ்யகீதம் ஒலித்தவண்ணமாகவே இருக்கின்றது இது உங்கள் செவிக்கு எட்டுவதில்லை. இதற்கு காரணம் பொல்லாத பொறிகளின் ஆர்ப்பாட்டமும் கொந்தளிப்புமே தான். எனவே, பொறிகளைப் புலன்களினின்று மீட்டு உள் முகமாகத் திருப்புங்கள். அப்பொழுது மனமும் உள்ளடங்கும்; திவ்ய ஒலியும் உங்கள் செவிகளில் கேட்கும்.

## மாயையின் வலையில் சிக்காதீர்

பெண்கள் தங்கள் மோகவலையை வீசி வெகு தந்தரமாக உங்களை வசப்படுத்தி விடுவார்கள். எனவே அவர்களிடம் மிகவும் ஜாக்கிரதையாகப் பழகுங்கள்.

பெண்களைப் பார்க்கும்பொழுது எல்லாம் உங்களுக்கு மகிழ்ச்சி ஏற்படலாம்; அவர்களை உங்களுக்கு உரிமையாக்கிக் கொள்ளவும் விரும்பலாம். ஆனால், அவர்கள் வலையிற் சிக்கிவிட்டாலோ பரிதவிப்பது திண்ணம்.

விவேகம் இழந்து காம ஆசையிலே அழுந்திக் கிடப் பவன்தான் பெண்களின் ரூபலாவண்யத்தைக் கண்டு மகிழ்வுறுவான்; இந்திரிய நுகர்ச்சியையும் விரும்புவான்.

உண்மையாக, சரீரத்தில் அழகு என்பதே இல்லை. ஆனால், அறியாமையினால் காமவிகாரன் அழகு இருப்பதாக எண்ணி அதில் மயக்கம் கொள்கின்றான்.

பெண்கள் மீது ஏற்படும் சிறிய பற்றும் உங்களைப் பந்தத்திற் பிணைக்கப் போதுமானது. எனவே, அதை முற் றிலும் எதிர்த்துவிடுங்கள் அப்பொழுதுதான் உங்களுக்கு விடுதலை ஏற்படும்.

பரம்பொருள் பேரின்பமயமானது; மேலான சுகத்தை அளிக்கவல்லது. ஆனால், அதை அடைவது மிகவுங் கடினம்.

ஆசைகாட்டி மயக்குவது மாயையினுடைய தன்மை. உலகப்பொருள்கள் அனைத்தும் மாயையினுடையப் பொய்த் தோற்றங்கள்; மோகவலைகளே. இவ்வுண்மையை உணராது இந்திரிய நுகர்ச்சியை விரும்பி விஷய போகங்களில் ஈடுபடுவோன் படுகுழியில் வீழ்ந்து அழிந்துபட்டே போகின்றான்.

## உலக வாழ்க்கை

யௌவனம் நீர்க்குமிழிபோன்று மறையுந் தன்மையது. அது ஆரம்பத்திற் சிறிதுகாலம்வரைதான் இன்பம் தர வல்லது. பின் விரைவிலேயே அது துன்பமாகவும் பரிணமித்து விடுகின்றது.

வலிமை இழந்த யௌவனம் என்னும் எலியைச் சீக்கிரமே மமதைகொண்ட மூப்பாகிய பூனை விழுங்கிவிடுகின்றது.

மூப்பின் கேடுதான் என்னே! மூப்பு வந்ததும் உங்கள் அழகு மங்குகின்றது; முகம் விகாரமடைகின்றது; மயிர் நரைக்கின்றது; பற்கள் ஆடி உதிர்கின்றன; கண்கள் மங்கிப் பார்வையை இழக்கின்றன; காதுகள் கேட்கும் சக்தியற்றுப் போகின்றன; தேகம் ஒடுங்கிச் சுருங்குகின்றது; நடையும் தடுமாறுகின்றது; வெவ்வேறு வியாதிகளும் உடலை தாக்குகின்றன; உங்களது புத்திரர்களும் உங்களைக் கைவிடுகின்றனர். ஆக, இத்தனை விதக் கஷ்டங்களுக்கும் நீங்கள் ஆளாகின்றீர்கள். எனினும் உங்களின் தேகத்தின் மீதுள்ள

குறைந்ததாயில்லை; வாழ்க்கையிலும் வெறுப்புத் தட்டுவதாயில்லை. என்னே மதியீனம்! ஓ! அறிவிலியே, இப்பொழுதாவது மனத்தூய்மை - விசுவாசம்-வைராக்கியம் விவேகம் - சுருதிகளைக் கேட்டல் - கேட்டதைச் சிந்தித்தல் - ஜபம் - தியானம் முதலிய ஆத்மீக நெறிகளை மேற்கொண்டு பிறப்பு_இறப்பு-மூப்பு அற்ற அழியாத ஆத்மாவை அடையப் பாடுபடுவீர்களாக!

நெருப்பிற்கு குளிர்மை கிடையாது. அது போன்று, அழியக்கூடிய இவ்வுடலத்திற்கு சாகாத்தன்மையும் மூப்பிலிருந்து விடுதலையும் கிடையாது.

வெடிப்புற்ற மண்பானையிலிருந்து நமக்குத் தெரியாது தண்ணீர் கசிந்து வெளிச்செல்வதுபோன்று, நமது உடலின் கண் உள்ள துவாரங்கள் மூலம் நமது வாழ்க்கையும் நமக்குத் தெரியாது சிறுகச் சிறுகச் சிதறி மறைந்து கொண்டே போகின்றது. இந்திரிய போகங்களில் அழுந்திக் கிடப்பவன் இதை அறிய அசக்தனுகின்ருன்.

இவ்வுலக வாழ்க்கை நீர்க்குமிழி போன்று நிலையற்றது. காலம் என்ற எலி அதனைத் தின்றவண்ணமாகவே இருக்கின்றது. எனவே, அழிவற்ற-சாஸ்வதமான - நித்திய வாழ்வை நாடுங்கள்; ஆத்மனை அடையுங்கள்.

மரணத்தின் கஷ்டத்தையும், உலக வாழ்க்கையின் வெவ்வேறு இன்னல்களையும், துன்பங்களையும் சிந்தித்துப்பாருங்கள். அப்பொழுது உங்களிடம் வைராக்கியம் பிறக்கும்.

இரவும் பகலும் ஒரே சமயத்தில் சேர்ந்து இருத்தல் முடியாது. அது போன்று உலாகாயதமும் ஆத்மீகமும்

ஏக காலத்திற் சேர்ந்து இருத்தல் முடியாது. உலோகாய தத்தைத் துறந்தால்தான் அமரவாழ்வை அடைதல் முடியும்.

ஆந்தையால் நல்ல சூரிய வெளிச்சத்தைப் பார்த்தல் முடியாது. அதுபோன்று அஞ்ஞானம் - அகந்தை - தற்பெருமை - முதலிய அழுக்குகள் நிறைந்த உள்ளத்தால் தன் உள்ளத்தில் ஜோதிமயமான ஆண்டவனைப் பார்த்தல் முடியாது.

## துறவு வாழ்க்கை

இவ்வுலகில் உங்களுக்கு ஒன்றும் சொந்தமானதன்று; உங்களுடைய தேகமும் உங்களுடையதன்று. எனவே ஒன்றிலும் உடைமையைக் கோராது பற்றுதல் - ஆசைகள் அற்று ஆத்மனில் இன்புற்றிருப்பீராக!

மனிதன் அழியக்கூடிய, நிலையற்ற உலக போகங்களில் நித்திய திருப்தியையும் மேலாம் சாந்தியையும் காணுததால் அவற்றை அடையும்பொருட்டு சத் - சித் - ஆனந்தப் பரம் பொருளையே நாடுகின்ருன்.

செல்வத்தைச் சேமித்து வைப்பதிஞல் துக்கந்தான் ஏற்படுகின்றதேயொழிய சந்தோஷம் ஒருபொழுதும் விளைவ தில்லை. அன்றியும், அது கேடுகளுக்கெல்லாம் காரணமாக வும் உள்ளது; நீடித்தும் நிற்பதில்லை. எனவே அதைத் துறந்து, வற்ருத நிலைபேறுள்ள ஆத்மீகச் செல்வத்தை அடையப் பாடுபடுவீராக!

மனைவி - மக்கள் - செல்வம் முதலியவைகளில் பற்று தலின்மை, இகபர சுகங்களில் ஆசையின்மை, அழியக் கூடிய உலகப் பொருள்களிடத்து உதாசீனம், சர்வஜீவராசி களிடத்தும் காருண்யம், சாதனச் சதுஷ்டயங்கள் - இவை யாவும் எவனிடத்து நிறைந்துள்ளனவோ அவனேதான் வேதாந்தம் கற்கவும் அப்பியசிக்கவும் வல்லவன்.

எவன் பந்தங்கள் யாவும் நீங்கப்பெற்று, நாவடங்கப் பெற்று, ஆசைகளும் அவற்றின் தூண்டுதல்களும் நலியப் பெற்று, ஞானமும் ஒளியும் திகழப்பெற்றுள்ளானோ அவனே மனிதரில் மேம்பட்டவன் ஆவான்.

துறவு உங்களது இலட்சியத்திற்கு இட்டுச் செல்லும் ஒரு மார்க்கமாகும் அதுவே உங்களது இலட்சியம் ஆகாது.

எவன் துறவின் கொள்கையைப் பின்பற்றுகின்றனோ, எவன் மிதஆகாரம் புசிக்கின்றனோ, எவன் பொறிகளை அடக்கி ஆளுகின்றனோ அவனே பரப் பிரம்மத்தை அடைய வல்லவனுவான்.

உங்களது ஆத்மீக முன்னேற்றத்திற்கு தடையாயிருக்கும் அனைத்தையும் உதறித்தள்ளுங்கள்.

பரப்பிரம்மத்தை அறிவதற்குரிய முக்கியமான சாதனங்கள் வைராக்கியமும் அனுத்தும வஸ்துக்களைப் புறக்கணிப்பதுமாம்.

உலகப் பொருள்களில் ஆசையிருக்குமளவும்ஆண்டவன் அருள் கிட்டாது. ஆசை அறுந்தால்தான் அவன் அருள் பிறக்கும்.

உங்களுக்கு மரணம் எந்த நிமிஷத்திலும் சம்பவிக்கலாம். எனவே, ஆத்மீக சாதனையை ஒருக்காலும் ஒத்தி வைக்காதீர்கள். நாளை செய்வதை இன்றே செய்யுங்கள். இன்று செய்வதை இந்த நிமிஷத்திலேயே செய்துவிடுங்கள்.

உலகப் பொருள்களின் அநித்தியத்தை நன்கு உணர்ந்தால்தான் பரம்பொருளை அறிய உங்களிடம் ஊக்கம் எழும்.

தேகமாகிய சிறைக்கூண்டை நீங்களேதான் ஏற்படுத்திக் கொண்டுள்ளீர்கள் அதை எந்த நிமிஷத்திலும் தகர்த்தெறிய உங்களுக்கு உரிமையும் போதிய சக்தியும் உண்டு. எனவே, தாமதம் செய்யாது இப்பொழுதே கூண்டிலிருந்து வெளிவர முயற்சிசெய்யுங்கள்.

உங்கள் வாழ்க்கையிற் பெரும் பகுதியை வீணுக்கி விட்டீர்கள். இன்னும் சிறு பகுதியேதான் எஞ்சியுள்ளது. இதையாவது ஆத்மீக சாதனையிற் செலவிடுவீராகில் நீங்களும் ஆண்டவனை அடைந்து இன்புற்றிருக்கும் வாய்ப்பைப் பெறலாம்.

பற்றற்ற பெரியோர்கள் மேலான இலட்சியத்தையே அடைகின்றனர்; பேரின்பத்திலேயே திளைத்திருக்கின்றனர்.

துறவினுல் ஈசுவர பக்தி ஏற்படுகின்றது; பேரின்பம் விளைகின்றது. உலகமுழுவதிற்கும் ஏக சக்கிராதிபதியாய் இருந்தாலுங்கூட, ஏன், இந்திரப் பதவியையே வகித்தாலுங் கூட, இதற்கு ஈடுஆகாது. எனவே துறவு வாழ்க்கையை மேற்கொள்ளுங்கள்.

அஞ்ஞானமாகிய படலம் உங்களது கண்களை மறைப்பதால் உங்களால் ஆத்மீகப் பாதையில் முன்னேற முடியவில்லை. குருவின் உபதேசங்களை மேற்கொண்டு அதன்படி ஒழுகுவீராகில் அப்படலம் உங்களது கண்களை விட்டு நீங்கும்; ஆத்மீகப் பாதையிலும் தங்கு தடையில்லாது முன்னேறலாம்.

குருவினுடைய வாக்குகளே வேதங்கள். வேதங்களுடைய சாரத்தையேதான் குரு தனது உபதேசங்கள் வாயிலாகத் தருகின்றார். எனவே குரு வாக்கியங்களில் பூரண

விசுவாசம் கொள்ளுங்கள். அப்பொழுதுதான் வேதங்களிலும் அளவுகடந்த நம்பிக்கை ஏற்படும். ஆத்மனையும் அறிய முடியும்.

சற்குருவைத் தரிசிப்பதற்கு உங்களிடம் தீவிர தாகம் ஏற்படவேண்டும். அப்பொழுது தான் அவர் தரிசனமும் கிட்டும்.

உங்கள் இதயத்தை அவருக்குத் திறந்து காட்டுங்கள். அவர் அருளுக்குத் தாகங்கொள்ளுங்கள். அப்பொழுது உங்களுக்கு மேலாம் மேன்மை ஏற்படும்.

ஈசுவரன் அல்லது குரு அருள் கிட்டுவதற்குப் பணிவும் தன்னல மறுப்பும் இன்றியமையாதவை.

குருசேவை, பக்தியுடனும் விசுவாசத்துடனும் கூடிய வழிபாடு, ஆத்மநிவேதனம் — இவை மூன்றும் எல்லா மதங்களுக்கும் முதுகெலும்பாகும்.

அகில அன்பு, பொறி அடக்கம், பிரம்மநிஷ்டை குருவின் உதவி, பூரண நம்பிக்கை, துறவு—இவை யாவும் விரைவாகவும் உறுதியாகவும் உங்களை உங்களது இலட்சியத்திற்கு இட்டுச்செல்லும்.

மாயவாழ்வெனும் சோகத்தால் உணங்கியவன் உள்ளம் குளிரவேண்டுமானல் அவன் சற்குரு பாதாரவிந்தத்தையே தான் அடைக்கலம் புகுந்தாகவேண்டும். அதுதான் அவனுக்கு ஒப்பற்ற மேலாம் புகலிடம். அல்லாது காட்டிற் கோ மலைக்குகைக்கோ செல்வதினுல் அவனுக்கு ஒருவித நலனும் ஏற்படாது.

சற்குருவின் பாதுகாப்பில் இருப்பவனே பாக்கியவான் .

சாதனையின்றித் தியானமும், வேதங்களில் நம்பிக்கை யின்றி மனப்பண்பாடும், கவனமும் விழிப்புமின்றி ஆத்மீக முன்னேற்றமும், குருவின்றி ஆத்மஞானமும் இல்லை.

கடலிலிருந்து மேகங்களை மேலே கொண்டுபோய் நல்ல நீராக வர்ஷிக்கச் செய்யும் சூரிய கிரணங்களைப் போன்று குருவும் வேதங்களாகிய சமுத்திரத்திலிருந்து அரிய விஷயங் களைத் தொகுத்து எடுத்து ஆத்மீக சாதகர்கள் கடைத் தேறும் பொருட்டு அருள்மாரியாகப் பொழிகின்றார்.

ஆலமரத்தடியில், மோன நிலையில், ஞானமுத்திரை யுடன், தேஜோமயமாய் வீற்றிருக்கும் ஆதிபுருஷனும் பரமகுருவும் பவானியின் பதியுமான தக்ஷிணாமூர்த்தியைத் தியானியுங்கள். உங்களுக்கு மேலாம் நன்மை ஏற்படும்.

மாயவாழ்வின் மோகத்தையும் அஞ்ஞான இருளின் அந்தகாரத்தையும் நீக்க வல்ல சற்குருவின் பாதாரவிந்தத் திற்கு அநேககோடி நமஸ்காரம். அவர் அருள் நமக்கு என்றென்றும் உரித்தாகுக!

## மனதின் தன்மை

உருக்கிய தங்கம் எதில் வாத்தாலும் அதன் உருக் கொள்கிறது. அதுபோல் மனமும் எந்த விஷயத்தை நினைக் கிறதோ, அதன் உருவை யடைகிறது. ஆரஞ்சை நினைத் தால் உடனே அது ஆரஞ்சுப் பழமாகிறது. பொறாமை கொண்டால் பொறாமைத் தீயாகிறது. யார்மேல் பொறாமை யோ அவர் தீமையெல்லாம் அதற்கும் வந்து சேருகிறது. ஒரு பெண்ணை நினைத்தால் மனமே பெண்மயமாகிறது. எந்த விகாரத்தை நினைத்தாலும் மனம் அதுவாகிறது. கடவுளையே நினைத்தால் மனம் கடவுள் தன்மை பெறுகிறது.

## குருமகிமை

''ஆசாரியான் புருஷோவேத'' குருவை அடைந்தவனே வேதங்களைக் கற்றுணர்ந்தவன் இவ்வாறு வேதங்கள் இயம்புகின்றன. ஆதலால் ஆத்மீக மார்க்கத்திற்குக் குரு இன்றியமையாதவர்.

குருவைப் பெற்றவனே பரப்பிரம்மத்தை அறிய வல்லவன். குருவேதான் ஆன்மீக மார்க்கத்திற்கு ஒப்பற்ற வழிகாட்டி. குருமூலம் பெற்ற ஞானமே பூரணத்துவம் பெற்றதாகிறது.

பிரம்மஞானம் பெறுதற்குக் குரு மிகவும் அவசியம். வேதங்களைக் கற்றுணர்வதாலும் குருவினுடைய உதவியும், ஆசியும் இல்லையேல் ஆத்மனை ஒருக்காலும் அறிய முடியாது.

குரு மூன்று உலகங்களையும் பிரகாசிக்கச் செய்யும் ஒளிப்பிழம்பே, ஞானவிளக்கே.

குருவின் அடிபணிந்து விசுவாசத்துடன் அவருக்குக் குற்றேவல் புரியும் சாதகனே பரம்பொருளின் தத்துவத்தை அறிய வல்லவன்.

எப்பொழுதும் உங்களை விட்டுப் பிரியாது உங்களுள்ளே உறைபவரும், மறைவாக இருந்து உங்களை இரட்சித்துக் காப்பவருமான பரமாத்மாவேதான் கருணையின் மேலீட்டில் உங்களை ஆட்கொள்வதற்காக மனித உருத்தாங்கி உமது குருவாக இந்நிலவுலகில் அவதரித்துள்ளார்.

குரு சாதாரண மனிதரல்ல. அவரே உங்களது இஷ்ட தெய்வம். இதைத்திடமாக மனதிற் கொண்டுதான் உங்களது சாதனையைத் தொடங்க வேண்டும்.

ஞான விருந்து

## நீங்கள் செய்ய வேண்டியவை

1. எளிமையாக இருங்கள்
2. பணிவுடன் இருங்கள்
3. பெருந்தன்மையுடன் இருங்கள்
4. மகிழ்ச்சியுள்ளவர்களாக இருங்கள்
5. உண்மையுணர்வுடன் இருங்கள்
6. கருணையுடையவர்களாக இருங்கள்
7. விசுவாசமுடையவர்களாக இருங்கள்
8. பொறுமையுடன் இருங்கள்
9. சுயநலமற்று இருங்கள்

1. பிறரை வெறுக்காதீர்கள்
2. பிறருக்கு தொல்லை தராதீர்கள்
3. பிறர் மனதை புண்படுத்தாதீர்கள்
4. தீயதொடர்பு கொள்ளாதீர்கள்
5. பிறரைக் குற்றம் கூறாதீர்கள்
6. சோம்பி இருக்காதீர்கள்
7. கோபம் கொள்ளாதீர்கள்
8. பேராசையின் பிடியில் சிக்காதீர்கள்
9. பொய் சொல்லாதீர்கள்

---

# ஞானயக்ஞம்

ஜகத்குரு ஸ்ரீ சுவாமி சிவானந்தருக்கு மிகவும் பிடித்த மானது ஞானயக்ஞம், குருதேவரால் 1936ல் ரிஷிகேசத்தில் தெய்வநெறிக்கழகம் (DIVINE LIFE SOCIETY) தோற்று விக்கப்பட்டது. 1938ம் ஆண்டு மதுரை மாநகரில் தெய்வ நெறிக் கழகத்தின் கிளை ஆரம்பிக்கப்பெற்றது. அந்நாள் முதல் இந்நாள் வரை தொடர்ச்சியாக கழகம் சமுதாயத் திற்கு பலவகைகளில் தொண்டாற்றிக் கொண்டுவருகிறது. 1988ம் ஆண்டாகிய இவ்வாண்டில் மதுரை கழகம் தனது பொன் விழாவினை "திரிவேணி விழா" என்ற பெயரில் ஆகஸ்ட் 26ம் தேதி முதல் துவங்கி, மதுரையிலும், மதுரையைச் சுற்றியுள்ள வேறு இடங்களிலும், கல்லூரிகளிலும் பள்ளிகளிலும் தொடர்ந்து 50 நாட்கள் கொண்டாட ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளது. அதனை முன்னிட்டு 50 இலவச வெளியீடுகளும் வெளியிட்டு அன்பர்களுக்கு வழங்க முடிவு செய்யப்பட்டு பல வெளியீடுகள் வெளிவந்து கொண் டிருக்கின்றன. இன்னும் பல வெளியீடுகள் வெளிவரக் காத்திருக்கிறது. இது உயர்ந்த திருப்பணி, யக்ஞத்தில் சிறந்தது ஞானயக்ஞம், இன்னும் பலர் தாமாகவே முன் வந்து பொருளுதவி செய்து வருகின்றனர். இத்திருப்பணி வெற்றியடைய அனைவரும் ஆதரவு தருவதுடன் கீழ்க்கண்ட முகவரியில் தொடர்பு கொள்ளவும் வேண்டப்படுகிறார்கள்.

இவண்

**தெய்வநெறிக் கழகத்தார்**

மதுரை மாநகர மத்திய அலுவலகம் :

**செயலாளர், தெய்வநெறிக் கழகம்**
Off : 6, சென்ட்ரல் மார்க்கெட் தெரு,
மதுரை-625 001. போன் : 31265

மதுரை அண்ணநகர் பகுதி :

**அமைப்பாளர், சிவானந்தர் நூல் பயில்குழு**
"ஸ்ரீ பாலாஜி" 180, வைகைக் காலனி,
அண்ணநகர், மதுரை-20.